35500



சகல உரிமைகளும் பதிப்புரிமைக்குட்பட்டவை / All Rights Reserved

இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**16 | T | I, II**

கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)
General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)

| | |
|---|---|
| இஸ்லாம் | I, II |
| Islam | I, II |

மூன்று மணித்தியாலம்
*Three hours*

மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## இஸ்லாம் I

அறிவுறுத்தல்கள் :

* எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
* 1 தொடக்கம் 40 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிந்தெடுக்க.
* உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (X) இடுக.
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து அவற்றைப் பின்பற்றுக.

1. 'ஹிதாயத்' என்பதன் கருத்து
   (1) இஸ்லாமிய வழி
   (2) நேர் வழி
   (3) மறுமைக்கான வழி
   (4) நபி (ஸல்) அவர்களின் வழி

2. 'அல் - மாஉத் தவாரி' என்னும் பிரிவில் அடங்கும் நீர்
   (1) தேநீர் (2) பழச்சாறு (3) இளநீர் (4) கடல் நீர்

3. மனிதர்கள் செய்வதற்கு அனுமதிக்கப்பட்டபோதும், அல்லாஹ்வால் மிகவும் வெறுக்கப்பட்ட ஒரு செயல்
   (1) தலாக்
   (2) பலதார திருமணம்
   (3) பிரயாணம்
   (4) தொழுகைகளை சேர்த்துத் தொழல்

4. மறுமையில் முதலில் விசாரிக்கப்படும் ஓர் 'இபாதத்'
   (1) தொழுகை (2) நோன்பு (3) ஸக்காத் (4) ஹஜ்

5. நபி முஹம்மது (ஸல்) அவர்களுக்கு அல் - குர்ஆன் அருளப்பட்டு பூரணப்படுத்தப்படுவதற்கு எடுத்துக் கொண்ட வருடங்கள்
   (1) 10 ஆகும். (2) 11 ஆகும். (3) 21 ஆகும். (4) 23 ஆகும்.

6. இஜ்மாஉ, கியாஸ் தவிர்ந்த ஏழு துணை மூலாதாரங்களுள் **அல்லாதது** பின்வருவனவற்றுள் எது?
   (1) இல்லத் (2) இஸ்திஹ்ஸான் (3) உர்ப் (4) கவ்லுஸ் ஸஹாபா

7. இமாம் ஸமஹ்ஷரீ அவர்கள் இலக்கியக் கண்ணோட்டத்தில் எழுதிய அல் - குர்ஆன் தப்ஸீர் நூலின் பெயர்
   (1) ஜலாலைன் ஆகும்.
   (2) கஷ்ஷாப் ஆகும்.
   (3) பீ ழிலாலில் குர்ஆன் ஆகும்.
   (4) பைழாவி ஆகும்.

8. தூய்மை, வளர்ச்சி என்ற கருத்துக்களைத் தரும் இஸ்லாமிய ஐங்கடமைகளில் ஒன்று
   (1) ஸவ்ம் (2) ஸக்காத் (3) ஸலாத் (4) ஹஜ்

9. இமாம் புஹாரி (றஹ்) அவர்கள் பிரபல்யம் பெற்றிருந்த துறை
   (1) பிக்ஹ் துறை (2) வரலாற்றுத் துறை (3) ஹதீஸ் துறை (4) தப்ஸீர் துறை

10. தாய்ப்பாலை மட்டும் உணவாக உட்கொள்ளும் இரண்டு வயதுக்குட்பட்ட ஆண் குழந்தையின் சிறுநீர்
    (1) கடுமையான நஜீஸாகும்.
    (2) இலகுவான நஜீஸாகும்.
    (3) சுத்தம் செய்ய முடியாத நஜீஸாகும்.
    (4) சாதாரண நஜீஸாகும்.

11. அல் - குர்ஆனும் ஸுன்னாவும் திட்டமாக தீர்வு கூறாத பிரச்சினைகளுக்கு தீர்வு பெறக்கூடிய மிகச் சரியான இஸ்லாமிய வழி
    (1) பிக்ஹ் (2) தப்ஸீர் (3) கியாஸ் (4) இஜ்திஹாத்

12. நபி (ஸல்) அவர்களுடன் மல்யுத்தப் போட்டிகளில் ஈடுபட்ட மதீனாவில் வாழ்ந்த மல்யுத்த வீரர்
    (1) அபூ துஜானா
    (2) உஸைத் பின் ஹுழைர்
    (3) ருகானா
    (4) ஸஃத் பின் முஆத்

13. ஒரு திருமணத்துக்கு ஷாஹிதாக வருபவருக்கான நிபந்தனைகளில் ஒன்று
    (1) உறவினராக இருத்தல்
    (2) இஸ்லாமிய அறிவு பெற்றிருத்தல்
    (3) அறபு மொழி தெரிந்திருத்தல்
    (4) பேச்சு, கேள்வி புலன்களில் தெளிவு

14. 'அஸ்மாஉல் ஹுஸ்னா' விலுள்ள 'அல் - முஃனி' என்பதன் கருத்து
    (1) செல்வத்தைத் தடுப்பவன்
    (2) செல்வத்தை அழிப்பவன்
    (3) செல்வந்தன் ஆக்குபவன்
    (4) மனநிறைவுடைய செல்வந்தன்

15. ஒரே இஹ்ராமுடன் ஹஜ்ஜையும், உம்ராவையும் சேர்த்து நிய்யத் வைப்பது
    (1) தமத்துஉ (2) கிறான் (3) இப்ராத் (4) ரமல்

16. பிரயாணத்தில் ஈடுபடும் ஒருவர் தம்மீது கடமையான ஐங்காலத் தொழுகைகளை
    (1) நிறைவேற்றத் தேவையில்லை.
    (2) கழா செய்யலாம்.
    (3) இரண்டு நேரங்கள் வரை தாமதப்படுத்தலாம்.
    (4) சுருக்கியும் சேர்த்தும் தொழலாம்.

17. அல் - குர்ஆனில் கிதாப், ஹிக்மா என்ற தொடர் சொற்களில் 'ஹிக்மா' எனக் குறிப்பிடப்படுவதை இமாம் ஷாபிஈ (றஹ்) அவர்கள்
    (1) குர்ஆன் வசனமாகும்
    (2) நபிமார்களின் வரலாறாகும்
    (3) ஸுன்னாவாகும்
    (4) ஸஹாபாக்களின் கருத்துக்களாகும்

    எனக் குறிப்பிடுகின்றார்கள்.

18. அல் - குர்ஆன் சட்டதிட்டங்கள் விரிவாக தெளிவுபடுத்தப்பட்ட காலப்பிரிவு
    (1) மதீனா காலப்பிரிவாகும்.
    (2) மக்கா காலப்பிரிவாகும்.
    (3) மக்காவை வெற்றிகொண்ட காலப்பிரிவாகும்.
    (4) பெருமானாரின் இறுதிக் காலப்பிரிவாகும்.

19. நபி (ஸல்) அவர்களுக்குப் பலமான எதிர்ப்புக்களை வெளிப்படுத்தியதன் மூலம் அல் - குர்ஆனிலே பெயர் கூறப்பட்டு சபிக்கப்பட்டவர்
    (1) அபூஜஹ்ல் (2) அபூலஹப் (3) இக்ரிமா (4) அபூசுப்யான்

20. இலங்கை முஸ்லிம்கள் பற்றிய தகவல்களையும் உள்ளடக்கி அறபு மொழியில் எழுதப்பட்ட ஒரு வரலாற்று நூல்,
    (1) அஜாஇபுல் ஹிந்த்
    (2) கலீலா வதிம்னா
    (3) அல்-அய்யாம்
    (4) தஸ்கிரதுல் ஹுப்பால்

21. பின்வருவனவற்றுள் பர்ளு கிபாயாவான ஒரு செயல்
    (1) ஐங்காலத் தொழுகையை நிறைவேற்றல்
    (2) ஸக்காத்தை நிறைவேற்றல்
    (3) ஹஜ்ஜின்போது மக்காவில் ஒன்று கூடுதல்
    (4) சமூக நலச் செயற்பாடுகளில் ஈடுபடல்

[பக். 3 ஐப் பார்க்க

22. "இஸ்லாமியச் சட்டவியல் - ஒரு சர்வதேசப் பார்வை" என்னும் நூலின் ஆசிரியர்
(1) கலாநிதி சி. ஜி. வீரமந்திரி
(2) சிறியா கிரிபாமுன
(3) குமாரி ஜயவர்தன
(4) பேராசிரியர் பத்மநாதன்

23. 'இமாரத்' என்ற அரபுச் சொல் குறிப்பது
(1) அரசாட்சியை ஆகும்.
(2) தலைமைத்துவத்தை ஆகும்.
(3) நான்கு கலீபாக்களின் ஆட்சியை ஆகும்.
(4) புவியை வளப்படுத்தும் செயற்பாட்டை ஆகும்.

24. "மனிதன் வயிற்றைத் தவிர கெட்ட பாத்திரம் ஒன்றை நிரப்புவதில்லை. சாப்பிட வேண்டும் என்ற நிலை ஏற்பட்டால் மூன்றில் ஒரு பகுதி உணவுக்கும், மூன்றில் ஒரு பகுதி நீருக்கும், மூன்றிலொரு பகுதி ...?" என்ற நபி(ஸல்) அவர்களின் ஹதீஸில் குறிப்பிடப்படும் இறுதி மூன்றிலொரு பகுதி
(1) வெறுமனே விடுவதற்கு ஆகும்.
(2) மூச்சுக்கு ஆகும்.
(3) காற்றுக்கு ஆகும்.
(4) உடம்புக்கு ஆகும்.

25. தனது பிரச்சினையை முறையிட வந்த ஒரு பெண்மணியை விசாரிக்க தனக்கு சந்தர்ப்பம் கிடைக்காததால் மீண்டுமொருமுறை அவளை வருமாறு கூறி, தான் இல்லாதபோது இன்ன நபித்தோழரிடம் பிரச்சினையை முறையிடுமாறு நபியவர்கள் சுட்டிக்காட்டினார்கள். அந்த நபித்தோழர்
(1) அபூபக்கர் (ரழி) ஆவார்.
(2) அலி (ரழி) ஆவார்.
(3) உமர் (ரழி) ஆவார்.
(4) உஸ்மான் (ரழி) ஆவார்.

26. மறுமையில் 'ஸகர்' எனப்படும் நரகில் நுழைபவர்
(1) நோன்பு நோற்காதவர்
(2) ஸகாத் கொடுக்காதவர்
(3) தொழாதவர்
(4) ஈமான் கொள்ளாதவர்

27. மஸ்ஜிதுந் நபவி நிர்மாணிக்கப்பட்டது
(1) ஹிஜ்ரத்துக்கு முன்னராகும்.
(2) ஹிஜ்ரத்துக்குப் பின்னராகும்.
(3) நபி(ஸல்) அவர்கள் மக்காவில் இருந்தபோதாகும்.
(4) மக்காவுக்குத் திரும்பிச் சென்ற போதாகும்.

28. பின்வருவனவற்றுள் இமாம் ஷாபிஈ (ரஹ்) அவர்களால் எழுதப்பட்ட நூல்
(1) கிதாபுல் உம்மு
(2) பிக்ஹுல் அக்பர்
(3) முஅத்தா
(4) முஸ்னத் அஹ்மத்

29. 'வஹி கைரு மத்லூவ்' என அழைக்கப்படுவது
(1) அல் - குர்ஆன் வசனங்களாகும்.
(2) நபி முஹம்மது (ஸல்) அவர்களது ஸுன்னாவாகும்.
(3) குர்ஆன், ஸுன்னா இரண்டுமாகும்.
(4) நபிமார்களுக்கு அருளப்பட்ட வஹியாகும்.

30. நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்றபோது முதலில் தரித்திருந்த வீட்டினுடைய உரிமையாளரான நபித் தோழர்
(1) முஸ்அப் பின் உமைர் (ரழி)
(2) அபூ ஐயூப் (ரழி)
(3) முஆத் இப்னு ஜபல் (ரழி)
(4) அபூ தர் அல் - கிபாரி (ரழி)

31. ஒருவனிடம் 201 ஆடுகள் சொந்தமாக இருந்தால் அவன் கொடுக்க வேண்டிய ஸகாத்தின் அளவு
(1) 03 பெண் ஆடுகள்
(2) 03 ஆண் ஆடுகள்
(3) 02 பெண் ஆடுகள்
(4) 04 ஆண் ஆடுகள்

32. 'பிக்ஹுல் அவ்லவிய்யாத்' என்னும் அடிப்படையில் பின்வரும் செயற்பாடுகளில் நீர் எதற்கு முன்னுரிமை வழங்குவீர்?
(1) கற்ற பாடங்களை மீட்டுதல்
(2) வீட்டுப் பணிகளில் தாயாருக்கு உதவுதல்
(3) அல் - குர்ஆனை ஓதுதல்
(4) விபத்தில் சிக்கியவர்களை வைத்தியசாலைக்கு அழைத்துச் செல்லல்

[பக். 4 ஐப் பார்க்க

33. பின்வரும் அட்டவணையில் 'அ' நிரலில் சில கலைச் சொற்களும் 'ஆ' நிரலில் அவற்றின் விளக்கங்களும் தரப்பட்டுள்ளன.

| 'அ' | 'ஆ' |
|---|---|
| (1) தௌபா | A - இச்சைகளுக்கும் ஷைத்தானுக்கும் அடிமைப்பட்ட உள்ளம் |
| (2) ஸுஹ்த் | B - சிறந்த நற்பண்புகள் |
| (3) நப்ஸுல் அம்மாரா பிஸ் ஸூஃ | C - பாவக்கறைகளைப் போக்க சிறந்த வழிமுறை |
| (4) கல்பு ஸலீம் | D - பற்றற்ற வாழ்க்கை முறை |

மேலே 'அ' நிரலுக்குப் பொருத்தமான விதத்தில் முறையே 'ஆ' நிரல் ஒழுங்குபடுத்தப்படும்போது சரியாக அமையும் தெரிவு யாது?

(1) A B C D (2) B C D A (3) C D A B (4) D C B A

34. "நிச்சயமாக உடலில் ஒரு சதைத்துண்டு உள்ளது; அது சீர்கெட்டுவிட்டால் முழு உடலும் சீர்கெட்டு விடும். அது சீரடைந்து விட்டால் முழு உடலும் சீரடைந்து விடும்; அது தான் உள்ளம்." எனும் நபி மொழி கற்பிக்கும் மிகப் பொருத்தமான விளக்கம்

(1) மனித உடலில் உளத்தின் முக்கியத்துவம்
(2) உள ஆரோக்கியத்தின் முக்கியத்துவம்.
(3) உளப் போராட்டத்தின் முக்கியத்துவம்
(4) உளத்தூய்மையின் முக்கியத்துவம்

35. தொழுகையின் பின்வரும் பிரதான செயற்பாடுகளைக் கவனத்திற் கொள்க.

A - சூரத்துல் பாதிஹா ஓதுதல்
B - இரண்டாம் ஸஜ்தா
C - நிய்யத்துடன் தக்பீர் தஹ்ரீமா
D - கஃதாக் அமர்ந்து ஸலாம் கூறுதல்
E - ஸஜ்தா செய்து இப்திராஷ் அமர்தல்
F - ருகூஉ செய்து இஃதிதாலுக்கு வருதல்

மேலேயுள்ள செயற்பாடுகளை ஒழுங்குவரிசைப்படுத்தும் போது வரும் விடைத் தொகுதியைத் தெரிவு செய்க.

(1) A B C D E F (2) B C D E F A (3) C A F E B D (4) D E F A B C

36. பின்வருவனவற்றுள் இஸ்லாமிய அகீதா பற்றிய **பிழையான** கூற்று யாது?

(1) அல் - குர்ஆன், அல் - ஹதீஸ் என்பன இஸ்லாமிய அகீதாவின் மூலங்களாகும்.
(2) அகீதா தொடர்பாக பகுத்தறிவு ரீதியாக சிந்திக்க முற்பட்ட போது முஸ்லிம்களிடம் பல குழுக்கள் தோற்றம் பெற்றன.
(3) ஸலபுஸ் ஸாலிஹீன்கள், ஸஹாபாக்கள் வழியில் செல்வோர், "அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஅத்" என அழைக்கப்படுகின்றனர்.
(4) நபியவர்களினதும் கலிபாக்களினதும் காலப்பிரிவுகளில் அகீதாவைப் புரிந்துகொள்வதில் சிக்கல்கள் காணப்பட்டன.

37. பின்வரும் அட்டவணையில் **'X'** நிரலில் இஸ்லாமிய நம்பிக்கையுடன் தொடர்புபட்ட சில பதப் பிரயோகங்களும் **'Y'** நிரலில் அவற்றின் விளக்கங்களும் தரப்பட்டுள்ளன.

| X | Y |
|---|---|
| (1) இக்லாஸ் | A - பிரபஞ்சம், அதில் உள்ள அனைத்தும் தானாக உருவாகியவை. |
| (2) இல்ஹாத் | B - முகம்மது (ஸல்) இறுதி நபியாவார். |
| (3) காதமுன் நபி | C - அல்லாஹ்வின் பெயரால் பொய்ச் சத்தியம் செய்தல். |
| (4) ஷிர்குல் அஸ்கர் | D - அல்லாஹ்வுக்காக மட்டும் எனும் கலப்படமற்ற எண்ணத்துடன் செயற்படல். |

மேலே **'X'** நிரலுக்குப் பொருத்தமான விதத்தில் முறையே **'Y'** நிரல் ஒழுங்குபடுத்தப்படும்போது சரியாக அமையும் தெரிவு

(1) A B C D (2) B C D A (3) D A B C (4) D C B A

[பக். 5 ஐப் பார்க்க

[සියලු ම හිමිකම් ඇවිරිණි / முழுப் பதிப்புரிமையுடையது / All Rights Reserved]

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**16 | T | I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)
General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)

ඉස්ලාම් I, II
இஸ்லாம் I, II
Islam I, II

## இஸ்லாம் II

※ **முதலாம்** வினாவையும் வேறு நான்கு வினாக்களையும் தெரிவுசெய்து, மொத்தமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

※ முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

**1.** சுருக்கமான விடை எழுதுக.

(i) 'அல் - மாஉல் முஸ்த'மல்' என்றால் என்ன?

(ii) சிறுவயது முதலே மக்களால் அழைக்கப்பட்ட நபி (ஸல்) அவர்களின் **இரண்டு** சிறப்புப் பெயர்களையும் குறிப்பிடுக.

(iii) வஹி அருளப்படும் முறைகளில் **இரண்டைக்** குறிப்பிடுக.

(iv) 'ஹதஸ்' எனப்படும் தொடக்கின் **இரண்டு** வகைகளையும் தெளிவுபடுத்துக.

(v) எந்தக் கலீபாவின் காலத்தில் அல் - குர்ஆன் முதலில் நூலுருப்படுத்தப்பட்டது?

(vi) மஸ்ஜிதுல் அக்ஸா அமைந்துள்ள தேசம் இஸ்லாமிய வரலாற்றில் எவ்வாறு அழைக்கப்படுகின்றது?

(vii) நிகாஹ் எனும் சொல் இஸ்லாமியப் பரிபாஷையில் எதனைக் குறிப்பிடுகின்றது?

(viii) இஸ்லாமியப் பொருளாதாரத்தின் அடிப்படைகள் **இரண்டும்** எவை?

(ix) ஸகாத் பெறத் தகுதியானவர்களுள் 'காரிமூன்' யார் என்பதைத் தெளிவுபடுத்துக.

(x) கலீபா உமர் பின் அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்களின் உத்தரவுக்கிணங்க ஹதீஸ்களைத் திரட்டியவர் யார்?

**2.** (i) 'தஸ்கியதுன் நப்ஸ்' என்பதன் மொழிக் கருத்து யாது?

(ii) அல் - குர்ஆன் விளக்கும் உள்ளத்தின் **மூன்று** நிலைகளையும் குறிப்பிடுக.

(iii) இஸ்லாம் கூறும் நற்பண்புகளில் **ஐந்தைக்** குறிப்பிட்டு, அவற்றை விளக்குக.

**3.** (i) 'கியாஸ்' என்றால் என்ன?

(ii) அர்கானுல் கியாஸில் **மூன்றைக்** குறிப்பிட்டு, அவற்றை விளக்குக.

(iii) 'இஜ்மாஉவை சட்ட மூலாதாரமாகக் கொள்ளலாம்' என்பதை அல்-குர்ஆன், ஸுன்னா ஆதாரங்களோடு தெளிவுபடுத்துக.

(i) 'அல் - முஷாரகா' என்பதனை வரைவிலக்கணப்படுத்துக.

(ii) ஒரு முஸ்லிம் உழைப்பு முயற்சியில் ஈடுபடுகின்றபோது, தவிர்த்துக்கொள்ள வேண்டிய **மூன்று** விடயங்களைச் சுருக்கமாக விளக்குக.

(iii) இஸ்லாத்தில் உழைப்பின் முக்கியத்துவத்தைத் தெளிவுபடுத்துக.

[பக். 7 ஐப் பார்க்க

5. (i) குறைஷிக் காபிர்களை எதிர்த்து கவிதை பாடும்படி நபி (ஸல்) அவர்கள் ஊக்குவித்த ஸஹாபிகள் **இருவரின்** பெயர்களைத் தருக.

   (ii) நபி (ஸல்) அவர்களால் ஆரம்ப காலங்களில் பயன்படுத்தப்பட்ட ஊடக வழிமுறைகளில் **மூன்றைக்** குறிப்பிடுக.

   (iii) இஸ்லாம் கூறும் தொடர்பூடகங்களின் பண்புகள் **ஐந்தைச்** சுருக்கமாக விபரிக்குக.

6. (i) நபி (ஸல்) அவர்களின் தூதை ஏற்றுக்கொண்டு இலங்கை வந்த வஹப் இப்னு அபீ கப்ஷா (றழி) பற்றிக் குறிப்பிடும் **இரண்டு** ஆய்வாளர்களைத் தருக.

   (ii) இலங்கைக் கரையோரங்களில் குடியேறிய பனூ ஹாஷிம்கள் பற்றி சேர் ஜேம்ஸ் டெனன்ட் குறிப்பிடும் தகவலொன்றை விளக்கமாக எழுதுக.

   (iii) இலங்கையின் பொருளாதார அபிவிருத்தியில் ஆரம்பகால முஸ்லிம்கள் ஆற்றிய பங்களிப்புகளில் **ஐந்து** விடயங்களைச் சுருக்கமாக விளக்குக.

7. பின்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டிற்குச்** சிறுகுறிப்பு எழுதுக.

   (i) அல்-குர்ஆன் ஓர் அற்புதம்

   (ii) ரீ.பீ. ஜாயா

   (iii) இஸ்லாம் வழங்கியுள்ள மனித உரிமைகள்

   (iv) வட்டியும் அதன் விபரீதங்களும்

※ ※ ※

PAST PAPERS WIKI